REGD No. TN MS (C) 244

ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS)

Phone: 81-2818 4 பக்கம் விலை 30 காசு




# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்




● மலர்: 3 சென்னை 3—9—1979 திங்கள் (★) ✱ ● ✱ (★) வெளியூர் 4-9-1979 செவ்வாய் இதழ்: 316 ●

## பொய்ப் பிரச்சாரம் செய்வோர் வெற்றிபெறமாட்டார்கள்

# புரட்சித்தலைவரிடமிருந்து என்னைப்பிரிக்கமுடியாது

### நாஞ்சிலார் பேட்டி

**சென்னை, செப். 3- புரட்சித்தலைவரிடம் இருந்து என்னைப் பிரிக்க முடியாது. நான் ராஜினமா செய்யப் போவதாகப் பொய்ப் பிரச்சாரம் செய்பவர்கள் வெற்றி பெற மாட்டார்கள் என்று நிதி அமைச்சர் நாஞ்சிலார் கூறினர்.**



அமைச்சரவையிலிருந்து நாஞ்சிலார் விலகப்போவதாக சில பத்திரிகைகள் வெளியிட்ட பொய்ச் செய்தியை நாஞ்சிலார் திட்டவட்டமாக மறுத்தார்.

நிருபர்களிடம் நாஞ்சிலார் கூறுகையில் ''இந்த செய்திகளுக்கு எந்தவித ஆதாரமும் இல்லை'' என்ருர்.

நாஞ்சிலார் மேலும் கூறியதாவது:

எனக்கும் முதல்வர் புரட்சித்தலைவருக்கும் இடையே விரோதத்தை உருவாக்கவேண்டும் என்ற எண்ணத்தின் அடிப்படையில் சிலர்வேண்டுமென்றே திட்டமிட்டு பிரச்சாரம் செய்து வருகிருர்கள். அவர்களின்முயற்சிவெற்றி பெருது.

என்னையும் முதல்வர் புரட்சித் தலைவரையும் பிரிக்க எந்த சக்தியாலும் முடியாது என்று வாலாஜாபொதுக்கூட்டத்திலேயே நான் கூறி இருக்கிறேன்.

எனது அரசியல் பாரம்பரியம் உருவாக்கப்பட்ட விதமே தனியானது.

பதவிக்காகவோ அல்லது அதிகாரத்துக்காகவோ என்னை மாற்றிக்கொள்ளக் கூடியவனல்ல நான்.

கழகத் தலைமையிடம் உள்ள எனது விசுவாசம் நிரந்தரமானது.

எனது இலாகா சம்பந்தப்பட்ட சில வேலைகளில் ஈடுபட்டு இருந்ததால் அமைச்சரவைக் கூட்டங்கள் சிலவற்றில் என்ருல் கலந்து கொள்ள முடியாமல் போய் விட்டது.

இதுபற்றி முன்கூட்டியே முதல்வர் புரட்சித்தலைவருக்குத் தெரிவித்திருக்கிறேன்.

சின்னஞ்சிறு விஷயங்கள் பெரிதுபடுத்தப்பட்டு என்னைப் பற்றி தவருன கருத்தை உருவாக்க நினைக்கும்சிலர் வேண்டுமென்றே பொய்ச்செய்திகளை பரப்பி வருகிருர்கள்.

4ந்தேதி நடைபெறும் சட்டமன்ற உறுப்பினர்கள் கூட்டம் குறித்து முன்கூட்டியே புரட்சித் தலைவரை சந்தித்துப் பேச இருக்கிறேன்.

இவ்வாறு நிதியமைச்சர் நாஞ்சிலார் கூறினர்.

## இப்போதுதான் புரிகிறதா?

கருணுநிதியைப் பற்றி இப்போதுதான் புரிய ஆரம்பித்திருக்கிருர், கம்யூனிஸ்ட் தலைவர் கல்யாணசுந்தரம்.

இ.காங்கிரசுடன் கூட்டுச்சேரவேண்டும் என்கிருர் கருணுநிதி.

அவர் எந்தக் கொள்கைக்கும் மதிப்புக்கொடுக்கவில்லை என்று திருச்சியில் நிருபர்களிடம் கூறி கல்யாணசுந்தரம் வேதனைப்பட்டிருக்கிருர்.

கருணுநிதியின் சந்தர்ப்பவாதத்தை "எம். கே." இப்போதாவது புரிந்து கொண்டால் சரி!



## பொன்னையன் பொறுப்பில் புதிய இலாகா

சென்னை, செப். 3- இதுவரை முதல்வர் புரட்சித் தலைவர் பொறுப்பில் இருந்த பஞ்சாலைத்துறை இனிமேல் போக்குவரத்து அமைச்சர் பொன்னையன் வசமிருக்கும்.

இந்த மாறுதலை தமிழக அரசு ஒரு பத்திரிகைக் குறிப்பில் அறிவித்துள்ளது.

போக்குவரத்துத் துறையோடு பஞ்சாலைத்துறை பொறுப்பையும் அமைச்சர் பொன்னையன் கவனிப்பார்.

## கருணுநிதிக்கு சித்தபிரமையா ?

எம். ஜி. ஆரிடம் தனியாகப் பேசுகிற வாய்ப்புக் கிடைத்தால், அதை எப்படியாவது தேடுப் பெற்ருல், அது என்றைக்காவது உங்களுக்குக் கிடைத்தால், அந்த அதிர்ஷ்டமான நாளிலே...

-கருணுநிதி விளக்கெண்ணை பேச்சு

—கருணுநிதி பேச்சைப் படித்துப் பார்த்தால் அவருக்குச் சித்தபிரமை பிடித்துவிட்டதோ என்று எண்ணத் தோன்றுகிறதல்லவா?

-ஆட்சிப் பொறுப்பில் கருணுநிதி இருந்த போது எந்த வீட்டில் இருக்கிருர் என்றே கண்டுபிடிக்க முடியாது.

கோபாலபுரம் வீடா?

அண்ணுமலைபுரம் பங்களாவா?

கைலாச கவுண்டர் மாளிகையா?

--கலக்கல் மர்ம பங்களாவா?

—எங்கே இருக்கிருர் கருணுநிதி-அவரை எப்படிச் சந்திப்பது என்று அதிகாரிகளும்-அவரது கட்சியினரும் கைபிசைந்து நின்ற காலம் அப்போது இருந்தது.

கருணுநிதி அந்தப் பழைய ஞாபகத்திலேயே பேசிக்கொண்டுபோகிருர்.

## ஒரு குறள் - சிறுகதை

"என்னப்பா எழினி... நான் கேள்விப்பட்டது உண்மையா?'' என்று கேட்டுக்கொண்டே வந்தார் புலவர்.

''வாருங்கள் புலவரே, என்ன கேள்விப்பட்டீர்கள்?'' என்ருன் எழினி. படித்துக்கொண்டிருந்த ஓலைச்சுவடியைக் கட்டிவைத்துவிட்டு, புலவர் அருகில் வந்து உட்கார்ந்தான்.

புலவர்: ''நிலாவூரார், வேற்றுக் கருத்துடையோர் துணையை நாடுவதைவிட ஒத்தக் கருத்துடையோர் துணைவர்களாகலாம்'' என்று அறிவித்துள்ளாராமே?

எழினி: ஆம் புலவரே. உண்மைதான். ஒரு வாதத்திற்காக அவர் அப்படிச் சொன்னர்.

புலவர்: மேலெழுந்தவாரியாகப் பார்த்தால் வாதமாகத் தோன்றும். ஆனல் அதில் எவ்வளவு ஆழமான, ஏன் அழுத்தமான பொருள் புதைந்துள்ளது என்பது புரியும்.

## திருந்தாரோ?

**எழினி: உண்மைதான. நிலாவூரார் ஒரு வலம்புரிச்சங்கு.**

புலவர்: குவளையூரார் இதைஏற்க மறுத்துவிட்டாராமே.

எழினி: அப்படித்தான் நானும் கேள்விப்பட்டேன்.

என்ன செய்வது? காய்ச்சல் கண்டவனின் நாக்கிற்குக் கருப்பஞ்சாரும் வேம்பாகத்தான் கசக்கும்.

புலவர்: குவளையூராருக்கு இந்த அளவிற்கு ஏன் காய்ச்சல்?

**எழினி: எல்லாம் நிலாவூராரின் மணிமுடி மீது உள்ள ஆசைதான்.**

**புலவர்: அது மக்கள் தந்ததாயிற்றே.**

எழினி: அது யாற்ருர் காலடியில் இருப்பதை அவர் ஏற்ருலும் ஏற்பார், நிலாவூரார் தலையில் இருப்பதைப் பொறுத்துக்கொள்ள மாட்டார்.

புலவர்: குவளையூரார் யார் துணையை நம்பி இப்படி நடக்கிருர்?

எழினி: நிலாவூராரின் மணிமுடியைப் பறிக்க எதையுஞ் செய்ய துணிந்துவிட்டார் போலிருக்கிறது. அவர் நம்பிச் செல்லும் துணைகளெல்லாம் நிலாவூராரின் மணிமுடியைத் தட்டிவிட உதவலாம். ஆனல் குவளையூரார்தான் காப்பாற்றுவதாக போற்றுவதாக-வளர்ப்பதாகக் கூறும் கொள்கைகளை ஏற்காதவர்கள், மாருக எதிர்ப்பவர்கள். காஞ்சியாரின் இலட்சியங்களுக்குச்சொந்தக்காரர்கள் நிலாவூராரும் குவளையூராருந்தான். ஆனல் நிலாவூராருக்குக் காஞ்சியாரின் கொள்கைகளைக் காக்க ஆசை! ஆனல் குவளையூராரோ நிலாவூரார் தலையில் உள்ள மணிமுடியைத் தள்ளிவிடத் துடிக்கிருர்.

புலவர்: குவளையூரார் இப்படிக் கொஞ்சமும் அன்பில்லாதவராக நடப்பார் என்று நினைக்கவில்லை.

எழினி: அன்பில்லாது போனதற்குக் காரணம் எல்லாவற்றிலும் தனக்கென்ன லாபம் என்று கணக்குப் பார்ப்பதுதான். சேய்க்கு நோய்போகத் தாய் மருந்து சாப்பிடுவாள். ஆனல் குவளையூராரோ மருந்தை வேலைக்காரியைச் சாப்பிடச் சொல்லி

( 2-ம் பக்கம் பார்க்க )

## ★ ப. உ. ச. ★

**எழினி: மாற்றுக் கருத்துக் கொண்டவர்களின் நட்பு ஆபத்தில் கொண்டு விடும். ஒத்தக் கருத்துள்ளவர்கள் பகையை மறந்தால் ஆபத்து அண்டாது. நிலாவூரார் பகையை மறக்கத் தயாரானர்.**

புலவர்: நிலாவூராருக்கு எவ்வளவு பெரிய உள்ளம். எழினி, ஒரு மனிதன் உயர்ந்த நிலையில் இருக்கும் போது தாழ்வுற்றவர்களை மதிக்கும்போது, அவன் மதிப்புத் தானகவே உயரும் நிலாவூரார் உண்மையிலேயே பெரிய மனிதர் தனிப்பட்ட முறையில் தனக்கு இழைக்கப்பட்ட கொடுமைகளை, மக்கள் நலன் கருதி மறக்க முன்வந்தது மிகமிகப் போற்றற்குரியது. என்ன இருந்தாலும் சங்கு சங்குதான். எத்தனை முறை சுட்டாலும் அதன் வெண்மை மாருது.

## முன்னள் துணைமேயர் சடகோபன் மறைவு

சென்னை செப். 3- சென்னை மாநகராட்சியின், முன்னள் துணை மேயரும். கழகத்தின் முன்னணிச் செயல் வீரருமான இரா. சடகோபன் இன்று (திங்கட்கிழமை) காலை 11,30 மணியளவில் ராயப்பேட்டை மருத்துவமனையில் காலமானர். அவருக்கு வயது 50.

காலஞ் சென்ற சடகோபனுக்கு மனைவியும், இரண்டு மகன்களும், ஒரு மகளும் இருக்கிருர்கள்.

உடல்நலம்குன்றி ராயப்பேட்டை மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்ட சடகோபனுக்கு தீவிர சிகிச்சை அளிக்கப்பட்டது. சிகிச்சைபலன் அளிக்காமல் சடகோபன் காலமானர்.

## விஷச்சாராயம்: 12பேர் மரணம்

லக்னே, செப். 3- லக்னேவில் விஷச்சாராயம் குடித்த 12 பேர் மரணம் அடைந்தனர். மற்றும் 20 பேர் ஆபத்தான நிலையில் சிகிச்சை பெறுகிருர்கள்.

### ரூ. 56 லட்சத்தில் ஆராய்ச்சிக் கழகம்:

# தமிழ் நாட்டில் பருப்பு சாகுபடி பெருக்கு திட்டம்

### அமைச்சர் குழந்தைவேலு தகவல்

**சென்னை, செப். 3-தமிழ் நாட்டில் பருப்பு வகை ஆராய்ச்சி நிலையம அமைப்பதற்காகஇந்தியவேளாண்மை ஆராய்ச்சிக் கழகம் 56 லடசம் ரூபாய் அனுமதித்திருக்கிறது என்று தமிழக வேளாண்மைத்துறை அமைச்சர் ப. குழந்தைவேலு தெரிவித்தார்.**

தமிழக வேளாண்மை மற்றும்நீர்ப்பாசனத்துறை அமைச்சர் ப. குழந்தைவேலு டெல்லியில் நடைபெற்ற இந்திய வேளாண்மைக்கழகக் கூட்டத்தில் கலந்துகொண்டுவிட்டு சென்னை திரும்பினர்

அதன் தொடர்பாக 'அண்ணு' நாளிதழ் நிருபருக்கு அமைச்சர் ப. குழந்தைவேலு பேட்டியளித்தார். அப்போது அவர் கூறியதாவது:-

''தமிழ்நாட்டில் பருப்பு வகைப் பயிர்களின் ஆராய்ச்சிக்காக தனியாக ஆராய்ச்சி நிலையத்தைத் துவங்கவேண்டும் என்ற கோரிக்கையை இந்திய வேளாண்மை ஆராய்ச்சிக் கழகத்திடம் வற்புறுத்தி வந்தேன்.

''நேற்று (ஞாயிறு) புது டெல்லியில் நடைபெற்ற இந்திய வேளாண்மை ஆராய்ச்சிக் கழகத்தின் ஆண்டுப் பொதுக்குழுக் கூட்டத்தில் இதுபற்றிவற்புறுத்தினேன்.

அதற்கு இந்திய வேளாண்மை ஆராய்ச்சிக் கழகம் சம்மதித்து விட்டது. இதற்கான நிதியையும் ஒதுக்கியுள்ளது.

அதன்படிபுதுக்கோட்டை வம்பன் என்ற இடத்தில் ரூபாய் 56 லட்சம் செலவில் பருப்பு வகை ஆராய்ச்சிநிலையம் அமைப்பதற்காக திட்டம் மேற்கொள்ளப்பட்டுள்ளது.

இந்தப்பணி இந்த ஆண்டிலேயே துவக்கப்படும்.

சென்னை நகரைச் சுற்றியுள்ள வேளாண்மைத் தொழிலாளர்களுக்கு உதவவும், பின் தங்கிய விவசாயிகளுக்கு உதவு



வதற்கும் காய்கறி பயிர் செய்யும் திட்டம் அமுல்படுத்தப்பட இருக்கிறது. இந்தத் திட்டத்திற்கு 85 லட்சம் ரூபாய் மானியம் வழங்கப்படுகிறது.

மத்தியப் பெட்ரோலி

(2ம் பக்கம் பார்க்க)

உடலில் ஒரு சொட்டு ரத்தம் இருக்கும்வரை

# தி.மு.க.-இ.காங்கிரஸ் கூட்டு சேரவிடமாட்டேன்

## தி.மு.க.கொலை வெறியர்களிடமிருந்து இந்திராவை காக்க ரத்தம் சிந்திய நெடுமாறன் உறுதி

கோவை, செப். 3-உடலில் ஒருசொட்டு ரத்தம் இருக்கும் வரை தி. மு. க.-இந்திரா காங்கிரஸ் கூட்டுச் சேர விட மாட்டேன் என்று நெடுமாறன் கூறியிருக்கிறார்.

பெரியார் மாவட்ட இந்திரா காங்கிரஸ் கருத்தரங்கு, ஈரோடு பெரியார் மன்றத்தில் நடந்தது. கருத்தரங்கில் இந்திரா காங்கிரசைச்சேர்ந்த ப. நெடுமாறன் கலந்து கொண்டார்.

நெடுமாறன் பேசியதாவது:-

இந்தியாவில் இரண்டு ஆண்டுகள் ஆட்சி செய்த ஜனதாக் கட்சி ஜனநாயகத்தைக் குழிதோண்டிப் புதைத்துவிட்டது.

இந்தியப் பிரதமர் தேர்தல்பஞ்சாயத்துத்தேர்தலை விட மிகவும் மோசமாகப் போய்விட்டது.

எனவே தற்போது நடக்கவிருக்கும் தேர்தலில் வாக்காளர்கள் சிந்தித்து வாக்குகளைச் செலுத்த வேண்டும். அப்படிச் சிந்திக்காமல் வாக்குகள் செலுத்தினல் இதுவே கடைசி தேர்தலாகிவிடும்.

### கருணாநிதியின் பரிவு

தமிழகத்தில் இப்போது கருணாநிதி இந்திராவுக்காகப் பரிந்து பேசி வருகிறார்.

கருணாநிதி எப்படிப்பட்டவர். தேர்தல் நேரத்தில் என்னவெல்லாம் பேசுவார்-செய்வார் என்பது எங்களுக்குத் தெளிவாகப் புரியும்.

### முடியாது

கருணாநிதி ராமாயணத்தில்வரும் ராவணன். அவர் இந்திரா காங்கிரஸ் என்ற சீதையைப் பிடிக்க நினைக்கிறார். அவரால் அது முடியாது.

மாயமானைக்கண்டு நாங்கள் ஏமாறமாட்டோம். தமிழ்நாட்டில் உள்ள இந்திரா காங்கிரசாரின் உள்ளங்களைப் புரிந்து வைத்து இருப்பது நான் மட்டும்தான்.

### கூட்டுசேர விடமாட்டேன்

எனது உடலில் ஒரு சொட்டு ரத்தம் இருக்கும் வரை, தி.மு.க.-வுடன் கூட்டுச் சேர இந்திரா காங்கிரசை விடமாட்டேன்.

### விளம்பர கருணாநிதி

கருணாநிதி எல்லாக் கட்சித் தலைவர்களுடன் சேர்ந்து படம் பிடித்துத் தேர்தல் போஸ்டர் ஒட்டி விட்டார். இந்திராவுடன் சேர்ந்து இருப்பது போல் போஸ்டர் ஒட்டலாம் என்று நினைக்கிறார். அதை அனுமதிக்கமாட்டோம்.

இவ்வாறு நெடுமாறன் கூறியுள்ளார்.

(இந்திராகாந்தி மதுரை வந்தபோது அவரைக் கொலை செய்ய தி.மு.க.வினர் முயன்றனர். இந்திராவை வழிமறித்து திமுக நபர்கள் மிருகவெறியுடன் இந்திராவைநோக்கி தடியால் அடித்தபோது நெடுமாறனும் என்.எஸ்.வி. சித்தனும் மற்ற இ. காங்கிரசாரும் இந்திராவை சுற்றி நின்று தி. மு. க.வினரின் கொலை வெறித்தாக்குதலைத் தாங்கினர்கள். இதில் நெடுமாறன் தலையில் பலத்த அடிபட்டு ரத்தம் சிந்தியது நினைவு இருக்கலாம்.)

---

ஏழைகளின் துயரம் தீராவிட்டால்

## ராணுவப்புரட்சி ஏற்படும் நீதிபதி எச்சரிக்கை

சென்னை, செப். 3-ஏழைகளின் துயரம் தீர்க்கப்படாவிட்டால், நாட்டில் ராணுவப் புரட்சி ஏற்படும் என்று உச்ச நீதி மன்ற நீதிபதி வி. ஆர். கிருஷ்ணய்யர் எச்சரித்தார்.

தமிழக சட்ட உதவி மற்றும் யோசனைக்கழகத்தின் கூட்டம் சென்னையில் நேற்று நடைபெற்றது. இந்த கூட்டத்தில் உயர் நீதிமன்ற (சுப்ரீம்கோர்ட்) நீதிபதி வி. ஆர். கிருஷ்ணய்யர் கலந்து கொண்டார். கூட்டத்தில் பேசுகையில் அவர் கூறியதாவது,-

''ஏழைகளுக்கு சட்ட உதவி அளிப்பதில் மத்திய அரசு சட்டபூர்வமான முடிவு ஒன்றை அறிவிக்க வேண்டும்.

தேர்தல்கள் முடிந்து புதிய அரசு பதவி ஏற்றவுடன், இதைச் செய்யும் என நான் நம்புகிறேன்.

அரசியல் சட்டத்தில் உள்ள சமூக நீதிகள் ஏழைகளுக்குக் கிடைக்காவிட்டால், நமது நாடு நாசமாகிவிடும்.

நாம் தொடர்ந்து பணக்காரர்களுக்கே சலுகைகளை வழங்கிவந்தால் ராணுவப் புரட்சி ஏற்படும்.''

இவ்வாறு நீதிபதி வி. ஆர். கிருஷ்ணய்யர் பேசினர்.

---

## பியட் கார் விலை "கிடுகிடு" உயர்வு

பம்பாய், செப். 3-பியட்காரின் விலையை பிரீமியர் ஆட்டோமொபைல்ஸ் நிறுவனம் உயர்த்தி இருக்கிறது.

பியட் காரின் தற்போதைய விலை ரூ. 44 ஆயிரத்து 372. இன்று (திங்கட்கிழமை) முதல் பியட்கார் விலை 48 ஆயிரத்து 189 ரூபாயாகும். எட்டரை சதவீதம் விலை உயர்ந்துள்ளது.

டாக்சியாக மாற்றப்படும் பியட்காரின் நேற்றைய விலை 40 ஆயிரத்து 971 ரூபாயாகும். இன்று முதல் அது 44 ஆயிரத்து 491 ரூபாயாக உயர்ந்துள்ளது.

---

## சாமி ஆடி அன்பழகன்

சாமி ஆடிப் பூசாரி அன்பழகன் கரூரிலே போய்க் கண்டபடி பேசி இருக்கிறார்.

இந்தத் தேர்தலில் கழகம் 5 இடங்களைக் கூடப் பெற முடியாதாம். புரசைவாக்கம் ஜோசியர் புரொபசர் அன்பழகன் சொல்லியிருக்கிறார்.

உண்மையிலேயே அவர் அப்படி நினைத்தால்... கழகத்தைப் பற்றி உங்களுக்குப் பயம் தேவையில்லை.

அதே கூட்டத்தில் அன்பழகன் இன்னும் சொல்கிறார்:

''எம். ஜி. ஆருக்கு திராவிட உணர்வு இருந்தால் நாடாளுமன்றத் தேர்தலில் போட்டி போடாமல் ஒதுங்கிக்கொள்ள வேண்டும்.''

எங்களுக்குத்தான் ஐந்து இடம் கூட கிடைக்காதே. பிறகு ஏன் எங்களை ஒதுங்கச் சொல்கிறீர்கள்?

**புரட்சித்தலைவருக்கு மக்கள் மத்தியில் இருக்கும் அபரிமிதமான செல்வாக்கைக் கண்டு கருணாநிதியின் குட்டிப் பூசாரி அன்பழகனுக்கும் நடுக்கம் ஏற்பட்டிருக்கின்றது.**

ஐயோ இந்தத்தேர்தலோடு கருணாநிதி கம்பெனி திவாலாகி மூழ்கிவிடும் என்று அன்பழகன் அஞ்சுகிறார்.

அதனல்தான் இந்த முரண்பாடு.

5 இடம் கூடக் கிடைக்காது என்கிறார்-அடுத்தாற்போல் தேர்தலில்நிற்காதே என்கிறார்.

**பாவம்- இப்போதே தேர்தல் ஜுரம் வந்துவிட்டதே!**

---

## தேர்தல் களம்

### வடக்கு பம்பாயில் சுவாமி

ரத்லம், செப். 3 நாடாளுமன்ற இடைத் தேர்தலில் வடக்குபம்பாய் தொகுதியில் போட்டியிடப்போவதாகஜனதாத் தலைவர்களில் ஒருவரான சுப்பிரமணிய சுவாமி அறிவித்தார்,

வாஜ்பாயியிடம் முன்பு தனக்கு கருத்துவேற்றுமை இருந்த போதிலும் தற்போது எங்களுக்குள் ஒற்றுமை ஏற்பட்டுள்ளது என்றார் சுப்பிரமணியசுவாமி,

சரண்சிங் தனிப்பட்ட முறையில் ஊழல் பேர்வழி இல்லை என்றாலும் அவரது நண்பர்களும் அவரது குடும்பத்தினரும் ஊழல் பேர்வழிகள் என்றார் சுப்பிரமணியசுவகமி.

### சி. எப். டி.

ஜனநாயக காங்கிரஸ் கட்சியைத் தொடங்கிய ஜெகஜீவன்ராம் ஜனதாக் கட்சியில் இருந்தபோதிலும், பகுகுணா அந்தக் கட்சியை நடத்திக்கொண்டிருக்கிறார்.

தேர்தல் பற்றி முடிவு எடுக்க செப்டம்பர் 8-ந் தேதி முதல் 2 நாள் அந்த கட்சியின் மாநாடு டெல்லியில் நடக்கிறது.

### இந்திராவுக்கு அழைப்பு

இந்திராகாந்தி போட்டியிடுவது எந்தத் தொகுதியில்?

கான்பூர் தொகுதியில் போட்டியிட வருமாறு அங்குள்ள இ. காங்கிரஸ் தீர்மானம் நிறைவேற்றியுள்ளது.

கர்ணடகத்தில் குறிப்பாக சிக்மகளூர் தொகுதியில் போட்டியிட வருமாறு கர்ணடக இ. காங்கிரஸ் அட்காக் கமிட்டி அழைத்துள்ளது.

### ராஜ்நாராயணன்

முன்பெல்லாம் ரேபரேலி தொகுதியில் இந்திரா போட்டியிடுவதும் அவரை எதிர்த்து ராஜ்நாராயணன்போட்டியிடுவதும் வாடிக்கை.

போபால், மதுரா, அலிகார் போன்ற தொகுதிகளில் போட்டியிட என்னை அழைத்திருக்கிறார்கள் என்கிறார்ராஜ்நாராயணன். விரைவில் இதுபற்றி முடிவு எடுக்கப்படும் என்று அவர் தெரிவித்தார்.

---

## நேர்மையாக ஓட்டுப்பதிவு நடைபெறுமா?

இந்திராகாந்தி சந்தேகம்

நாகபுரி, செப். 3. நேர்மையாக இந்தத் தேர்தல் நடைபெறுமா என்ற அச்சம் உள்ளது என்று இந்திரா காந்தி கூறினர்.

நாகபுரி சென்ற இந்திரா காந்தி அங்கு நடந்த பொதுக்கூட்டத்தில் பேசினர். அப்போது அவர் கூறியதாவது:-

தற்காலிகப் பிரதமராக சரண்சிங் இருப்பதால் வடமாநிலங்களில் ஒட்டுப் பதிவு முறையாகவும் நேர்மையாகவும் இருக்குமா என்ற அச்சம் உள்ளது.

இதுபற்றி நான் ஏற்கெனவே ஜனதிபதிசஞ்சீவ ரெட்டியிடம் கூறி இருக்கிறேன்,

திட்டமிட்டபடி டிசம்பர் மாதத்தில்தேர்தலைநடத்த மாட்டார்கள் என்று கூட டெல்லியிலே வதந்திகள் நிலவுகின்றன என்றாலும் தேர்தலை ஒத்திவைப்பது என்பது சந்தேகம் தான்

ஜனதாக்கட்சி அரசுக்கும் ஜனதா எஸ். கட்சி அரசுக்கும் எந்த வித்தியாசமும் இல்லை.

### விவசாயியா?

சரண்சிங் தன்னை ஒரு விவசாயி என்று கூறிக் கொள்கிறார்.

சரண்சிங் ஒரு விவசாயியின் மகன்தான் என்றபோதிலும், அவர் கலப்பையைத் தொட்டதே கிடையாது என்று ஒருவர் சொன்னர். விவசாயிகளின் பிரச்சினைகளும் அவருக்குத் தெரியாது,

சர்ச்சைக்கு இடமில்லாத நபர்கள் அடங்கிய இடைக்கால அரசு ஜெகஜீவன்ராம் தலைமையில் இயங்கலாம் என்று யோசனை கூறி இருந்தேன். அது ஏற்கப்படவில்லை.

இவ்வாறு இந்திரா காந்தி கூறினர்.

---

## குழந்தைவேலு

(முதல் பக்கத் தொடர்ச்சி)

யம் மற்றும் ரசாயனத் துறை அமைச்சர் பாலா பழனூரைச் சந்தித்துப் பேசினேன்.

தமிழகத்திற்குத்தேவையான ரசாயன உரம் மற்றும் பூச்சிமருந்துகளை மத்தியக்கிடங்கில் இருந்து ஒதுக்கும்படி அவரிடம் கேட்டேன்.

அதே சமயம் பூச்சி மருந்தின்விலையைகுறைக்க வேண்டும் என்றும் வற்புறுத்தினேன்.

"கால்சியம் அமோனியம் சல்பேட்" உரத்திற்கு தமிழகத்தில் அதிகம் தேவை இருக்கிறது. இந்த உரத்தை தேவையான அளவு இறக்குமதி செய்ய வேண்டும் என்று மத்திய ரசாயன உரத்துறை அமைச்சர் பாலாபழனூரிடம் வற்புறுத்திக் கூறினேன்."

இவ்வாறு அமைச்சர் குழந்தை வேலு- நமது நிருபரிடம் கூறினர்.

---

## சமய நல்லூரில் நடந்தகழக கூட்டம்

மதுரை, செப். 3-மதுரை சமயநல்லூரில் நடந்த பிரும்மாண்டமான கழகப் பொதுக்கூட்டத்தில் திருப்பூர் மணிமாறன் எம்.எல்.ஏ, செல்வராஜ் எம்.எல்.ஏ, அமிர்தராஜ் எம்.எல்.ஏ, அய்யப்பன், வெ. பழனிச்சாமி, செல்லத்துரை, கருப்புசாமி பாண்டியன் மற்றும் பலர் பேசினர்.

---

## சட்டசபை தேர்தல்

நாடாளுமன்றத் தேர்தலுடன் குஜராத் சட்டசபைத் தேர்தலையும் சேர்த்து நடத்துவதில் எனக்கொன்றும் ஆட்சேபணை இல்லை என்று குஜராத் முதல்வர் பாபு பாய் பட்டேல் கூறினர்.

குஜராத்தில் ஜனதா கட்சிக்கு சரியான எதிர்க்கட்சி இ. காங்கிரஸ்தான். சரண்சிங் கட்சி அல்ல என்றார் பாபுபாய் பட்டேல்.

---

## பி.ஏ.; பி.எஸ்சி. தமிழ் படிப்புக்கான வசதி அதிகரிப்பு

அரங்கநாயகம் தகவல்

திருச்சி, செப். 3-

அடுத்த கல்வி ஆண்டு முதல் தமிழைப் பயிற்று மொழியாகக் கொண்ட பி. ஏ. பி. எஸ்சி பட்டப்படிப்புகளுக்கான வசதிகள் மேலும் அதிகரிக்கப்படும் என்று கல்வி அமைச்சர் அரங்கநாயகம் கூறினர்.

தமிழகக் கல்வி அமைச்சர் அரங்கநாயகம் திருச்சியில் நிருபர்களுக்கு பேட்டி அளிக்கையில் கூறியதாவது:-

மேல்நிலைக் கல்வியில் இரண்டாம் ஆண்டு படிக்கும் மாணவர்களில் அதிகம் பேர் தமிழைப் பயிற்று மொழியாகக் கொண்டு படிக்கிறார்கள். இதற்கு ஏற்ப அடுத்த கல்வி ஆண்டில் பி. ஏ. பி, எஸ்சி, போன்ற பட்டப்படிப்புகளில் சேர இருக்கும்மாணவர்களுக்கு கூடுதலான வசதிகள் செய்து தரப்படும்.

தாய்மொழியின் மூலம் கல்வி கற்பது மாணவர் ஆக்கத்திறனை அதிகரிக்கவே செய்யும் என்பது என்னுடைய சொந்த உணர்வு. ஆனல் மாணவர்கள் பாடபோதனை இன்ன மொழி மூலம்தான் இருக்க வேண்டும் என்று கட்டாயப் படுத்துவதில் அரசுக்கு நம்பிக்கைஇல்லை.

### தமிழ் படிப்புக்கு கிராக்கி

மேல்நிலைக் கல்வியில் இரண்டாம் ஆண்டில் ஒரு லட்சத்து 14 ஆயிரம மாணவர்கள் பயிலுகின்றனர்.

இவர்களில் பெரும்பாலானவர்கள் அடுத்த ஆண்டில் தமிழ் பயிற்றுமொழி பட்டப்படிப்பு வகுப்புகளில் சேருவார்கள்.

மேல்நிலைக் கல்வி இரண்டாம் ஆண்டுக்கான பொருளாதார பாடப் புத்தகத்தில் குறைபாடுகள் சில கூறப்பட்டன. அவைகளைத் திருத்துவதற்கு உண்டான நடவடிக்கைகள் எடுக்கப்படுகின்றன.''

இவ்வாறு அமைச்சர் அரங்கநாயகம் நிருபர்களிடம் கூறினர்.

---

## ஊர் நல அலுவலர் கோரிக்கை: காளிமுத்து நிறைவேற்றினர்

மதுரை, செப். 3-ஊர்நல அலுவலர்களின் கோரிக்கைகளை மாநாட்டு மேடையிலேயே அமைச்சர் காளிமுத்து நிறைவேற்றினர்.

தமிழ்நாடு அரசு ஊர்நல அலுவலர்கள் சங்கத்தின் மதுரை மாவட்ட சிறப்பு மாநாடு மதுரைக் கல்லூரியில் நடைபெற்றது.

மாவட்ட தலைவர் வி. சுப்பையா தலைமை வகித்தார். தாமோதரன்வரவேற்றார்.

உள்ளாட்சித் துறை அமைச்சர் கா. காளிமுத்து உள்ளாட்சித் துறைச்செயலாளர் டி. வி. வாசுதேவன் ஊரக வளர்ச்சி இயக்குனர் டி.டி. சுந்தரராஜ் சட்ட மன்றஉறுப்பினர்கள். இரா முத்தையா, ராஜசாமி, பரமசிவம், ராமதாஸ் மற்றும் இரா. ராமசாமி, ஆர். நாராயணராவ். ராசேந்திரன், பாண்டியராசன், திருஞானசம்பந்தன், திருப்பதி, ஏ. எஸ். சுப்பிரமணியம் ஆகியோர் பேசினர்கள்.

வா. அய்யாசாமி நன்றி கூறினர்.

மாநாட்டில் 33 கோரிக்கைகளை வலியுறுத்தினர் இதில் 17 கோரிக்கைகளை அமைச்சர் காளிமுத்து உடனே நிறைவேற்றுவதாகக் கூறினர். கூடியிருந்த ஊர்நல அலுவலர்கள் பலத்த கரஒலி செய்து அமைச்சரின் அறிவிப்பை வரவேற்றனர்.

மாநாட்டில் அமைச்சர் காளிமுத்து பேசுகையில் கூறியதாவது:

ஊரக வளர்ச்சித் துறைக்கு அடித்தளமாக விளங்குபவர்கள் ஊர்நல அலுவலர்கள். ஊரக வளர்ச்சித்துறை கிராம மக்களின் வறுமையையும், அறியாமையையும் எதிர்த்துப் போரிடும் துறை அந்தப் படையின் முன் வரிசையில் இருப்பவர்கள் ஊர்நல அலுவலர்கள்.

தியாக உணர்வு, தொண்டு உள்ளத்தோடு நீங்கள் பணியாற்றியதால் தான் தமிழக கிராமங்களில் மறுமலர்ச்சி தலைகாட்டத் தொடங்கியது.

உள்ளாட்சி, ஊர்நல அமைப்பு வளர்கிறது என்றால் ஊர்நல அலுவலர் அமைப்பு பலமாக இருக்கிறது என்று பொருள்.

அரும்பணி ஆற்றும் நீங்கள் அடக்கமாக இருக்கிறீர்கள். அடக்கமாக இருக்கும் காரணத்தால் உங்கள் கோரிக்கைகளை அலட்சியமாக அரசு கருதும் என்று எண்ண வேண்டாம்.

இந்த மாநாட்டின்மூலம் 33 கோரிக்கைகளை வற்புறுத்தி இருக்கிறீர்கள். இதில் 17 கோரிக்கைகள் நிறைவேற்றப் படுகின்றன (பலத்தகைதட்டல்) இவை வெகுவிரைவில் ஆணைகளாக வெளியிடப்படும். 8 கோரிக்கைகளை அரசுபரிசீலிக்கும்.

இவ்வாறு அமைச்சர் காளிமுத்து பேசினர்.

---

## ப. உ. ச. கட்டுரை

(1ம் பக்கத் தொடர்ச்சி)

விட்டு நோய் போகவில்லையே என்று மருந்து கொடுத்தவரைக் கடிந்துகொள்வார்.

புலவர்: ஆன்ற துணையும் இல்லை.

எழினி: 'தலைவன்' என்று தன்னைப் போற்றுபவன்தான் தக்க துணைவன் என்ற எண்ணம் அவருக்கு வளர்ந்துவிட்டது.

புலவர்: பச்சைக் கொடிக்கும் பச்சைப் பாம்பிற்கும் வேற்றுமை தெரியவில்லை போலும்.

எழினி: தவறு புலவரே தவறு. தெரிந்துதான் பாம்பைத் தேடிப்பிடித்து வளர்க்கின்றார். தான் பால் ஊற்றி வளர்க்கும் பாம்பு நிலாவூராருக்கு நஞ்சிட்டுக் கொல்லும் என்ற ஆசைதான்.

புலவர்: அன்புமில்லை, அமைந்த துணையுமில்லை, தானும் வலுவாக இல்லை.

எழினி: புலவரே இதைத்தானே வள்ளுவர் அழகாகக் கூறியுள்ளார்.

"அன்பிலன் ஆன்ற துணையிலன்
தான்துவ்வான்
என்பரியும் ஏதிலான்துப்பு"

புலவர்: மனிதர்களுடைய குணங்களை ஆய்ந்தறிந்த வள்ளுவர் கூறிய உண்மைகளைப் படித்தும் திருந்த மறுக்கிறார்களே?

**எழினி: திருந்துவதா? வள்ளுவர் கூற்றை இவர்கள் திருத்தாது விட்டால் போதாதா?**

---

## கர்ப்பூரி தாகூரை கொலை செய்ய முயற்சி

பாட்ணு, செப். 3-பீகார் சட்டசபை எதிர்க் கட்சித் தலைவர் கர்ப்பூரி தாகூரை கொலை செய்ய முயற்சி நடந்ததாக அவரே கூறி இருக்கிறார்.

பாட்ணவுக்கு போகும் முன்பு விக்ரம்கஞ்சில் ஒரு பொதுக் கூட்டத்தில் கலந்துகொண்டு திரும்புகையில் ஒரு பாலத்துக்கு அருகாமையில் தடங்கல் இருந்ததாகவும், மற்றொரு இடத்தில் ஆயுதம் தாங்கியவர்கள் வழிமறித்ததாகவும் கர்ப்பூரிதாகூர் கூறினர்.

---

கலைக்குழு முகவரி

தமிழ்மணி
மாலா கலைக்குழு,
14-பந்தல் குடித்தெரு,
செல்லூர், மதுரை-2

---

சுவரண்சிங் காங்கிரஸ் அறிவிப்பு

## சரண்சிங் கட்சியுடன் இணைய மாட்டோம்

புதுடெல்லி, செப். 3. சரண்சிங் ஜனதாவுடன் தேர்தல் உறவு வைத்துக் கொள்வோம். ஆனால் இணைய மாட்டோம் என்று சுவரண்சிங் காங்கிரஸ் அறிவித்துள்ளது.

மத்திய மந்திரிசபையில் சரண்சிங் ஜனதாவும் சுவரண்சிங் காங்கிரசும் இடம் பெற்றுள்ளன. இரு கட்சிகளும் ஒன்றாக இணைய வேண்டும் என்று சரண்சிங் வற்புறுத்தி வருகிறார்.

குறைந்தபட்சத்திட்டத்தின் அடிப்படையில் சரண்சிங் கட்சியுடன் தேர்தல் உறவு கொள்வது என்றும், ஆனால் இணைவது இல்லை என்றும் சுவரண்சிங் காங்கிரஸ் கட்சியின் காரியக் கமிட்டிக் கூட்டத்தில் முடிவு எடுக்கப்பட்டது.

## அண்ணா தொழிற்சங்க முயற்சி வெற்றி

திருச்சி, செப். 3-திருச்சியில் சைக்கிள் ரிக்ஷா உரிமையாளர்கள், சைக்கிள் ரிக்ஷாவின் வாடகையை 3 ரூபாயிலிருந்து மூன்றரை ரூபாயாக உயர்த்தினர்.

சைக்கிள் ரிக்ஷா தொழிலாளர்களிடம் மூன்று ரூபாயே வசூலிக்கவும் மேலும் 9 கோரிக்கைகளுக்கும் அண்ணா தொழிற்சங்கம் முயற்சி செய்தது. அந்த முயற்சியில் வெற்றி கிடைத்தது. அண்ணா தொழிற் சங்கத்தைச் சேர்ந்த வழக்கறிஞர், கே. பெருமாள், வி. பாலகிருஷ்ணன், மருதமுத்து ஆகியோர் சைக்கிள்ரிக்ஷா உரிமையாளர் சங்கப்பிரதிநிதிகளுடன் பேச்சுவார்த்தையில் கலந்து கொண்டனர்.



## பூச்சிமருந்து விலையை குறைக்க மத்திய அரசுக்கு

### அமைச்சர் குழந்தைவேலு கோரிக்கை

சென்னை, செப். 2-ஏழை எளிய சிறு உழவர்களும் வாங்கி தம் பயிர்களுக்கு பயன்படுத்திப் பலன் பெறும் வகையில் பூச்சி மருந்துகளின் விலையைக் குறைக்கும்படி மத்திய அரசை தமிழக விவசாய அமைச்சர் குழந்தைவேலு கேட்டுக்கொண்டுள்ளார்.

கோயம்புத்தூரில் உள்ள தமிழ்நாடு வேளாண்மைப் பல்கலைக் கழகத்தில், 'பூச்சிகளை கட்டுப்படுத்துவதற்கு உதவும் ரசாயனங்களின் உபயோகம்' என்ற பணிக் கருத்தரங்கு ஒன்று நடைபெற்றது. அப்பணிக் கருத்தரங்கு இந்திய அரசின் அறிவியல் தொழில் நுட்பத்துறையின் நிதி உதவியுடன் நடைபெற்றது. சென்னையில் உள்ள தொழில் நுட்பப் பொருளாதார ஆய்வு நிறுவனம் ஏற்பாடு செய்திருந்த அப்பணிக் கருத்தரங்கை தமிழக வேளாண்மை, நீர்ப்பாசனத்துறை அமைச்சர் திரு. ப. குழந்தைவேலு அவர்கள் துவக்கி வைத்து உரையாற்றினார். இப்பணிக் கருத்தரங்கில் பல்வேறு மாநில நிபுணர்கள் கலந்து கொண்டனர்.

அமைச்சர் குழந்தைவேலு பேசும்போது கூறியதாவது:

ஏழை எளிய சிறு உழவர்களால் வாங்க முடியாத அளவுக்கு பூச்சி மருந்துகளின் விலை ஏறியுள்ளது. ஆகவே, பூச்சி மருந்துகளை ஏழை எளிய சிறு உழவர்களும் வாங்கி தத்தம்பயிர்களுக்குப் பயன்படுத்திப் பயன்பெறும் வகையில் பூச்சிமருந்துகளின் விலையை குறைக்கும்படி மத்திய அரசைக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

தரக்குறைவான பூச்சி மருந்துகளை விற்பது தண்டனைக்குரியது என்றும், பூச்சி மருந்து உற்பத்தியாளர்கள் பூச்சி மருந்துகளின் தரம் குறையாமல் பார்த்துக் கொள்ளவேண்டும் என்றும் அமைச்சர் குழந்தைவேலு குறிப்பிட்டார்.

### வேலை வாய்ப்பு

கிராமப் புறங்களில் உள்ள படித்த இளைஞர்களுக்கு பூச்சி மருந்து தெளிக்கும் பயிற்சி அளித்து, அவர்களுக்கு பூச்சி மருந்து விற்பனை செய்வதற்குரிய அனுமதி வழங்கவேண்டும். இதனால் வேலையில்லாமல் இருக்கும் படித்த இளைஞர்களுக்கு வேலைவாய்ப்பு ஏற்படுவதுடன், பூச்சிமருந்துகளின் உபயோகம் அதிகமாகும் எனவே. பூச்சி மருந்து உற்பத்தியாளர்கள் கிராமங்களில் உள்ள படித்த இளைஞர்களுக்குப் பூச்சி மருந்து தெளித்தல்பற்றிய பயிற்சி அளிக்க முன்வர வேண்டும்.

இவ்வாறு அமைச்சர் குழந்தைவேலு பேசினார்.

டாக்டர் பா. நடராசன் முன்னின்று நடத்திய இப்பணிக் கருத்தரங்கில், தமிழ்நாடு வேளாண்மைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் அ. வேங்கடராமன் மற்றும் பல வேளாண்மை விஞ்ஞானிகளும், பூச்சி மருந்து உற்பத்தியாளர்களும் கலந்து கொண்டு ஆக்க பூர்வமான ஆலோசனைகளை வழங்கினர்.

## பழனி அண்ணா கைத்தறி தொழிலாளர் சங்கம்

பழனி, செப். 3-பழனி நகர அண்ணா கைத்தறி நெசவுத்தொழிலாளர் சங்கத்தை அனகாபுத்தூர் சி. ராமலிங்கம் எம்.எல்.சி. தொடக்கிவைத்தார்.

சங்கத்தலைவராக கே. கோபால்சாமி, செயலாளராக கே. கே. ஆறுமுகம், துணைத் தலைவராக பி. கிருஷ்ணன், துணைச் செயலாளராக கே. கருப்பணன் பொருளாளராக ஆர். ஜி. சாமி ஆகியோர் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

## ஒரே பிரசவத்தில் ஆறு குழந்தைகள்

ஏதென்ஸ், செப். 3- கிரீஸ் நாட்டுத் தலைநகரான ஏதென்ஸ் நகரில் இருக்கும் 21 வயது பெண்ணுக்கு ஒரே பிரசவத்தில் ஆறு குழந்தைகள் பிறந்தன.

இதில் நான்கு பெண் குழந்தைகள். இரண்டு ஆண் குழந்தைகள். ஒவ்வொன்றும் 300 கிராம் முதல் 700 கிராம் எடையுள்ளதாக இருக்கின்றன.

ஆறுவது மாதத்திலேயே இந்த குழந்தைகள் பிறந்திருக்கின்றன. பிறந்த குழந்தைகள் அனைத்தும் இப்போது உயிருடன் உள்ளன. என்றாலும் தொடர்ந்து உயிருடன் இருக்குமா என்பது சந்தேகமே என்று மருத்துவர்கள் கூறியுள்ளனர்.

### ஆர். எஸ். எஸ். இயக்கத் தொடர்பு

# ஜனதாவுக்குள் மீண்டும் குழப்பம்

## ஜெகஜீவன்ராம் நழுவல்-சந்திரசேகர் தவிப்பு

புதுடெல்லி, செப். 3- ஆர்.எஸ்.எஸ். இயக்கத்துடன் ஜனசங்கம் தொடர்பு கொண்டிருக்கும் விஷயம் ஜனதாக் கட்சியின் நிர்வாகக் குழுவில் விவாதத்துக்கு வந்தது. காரசாரமான விவாதங்களுக்குப் பிறகு, இப்பிரச்சினையை சந்திரசேகரே தீர்த்துக் கொள்ளட்டும் என்று கைகழுவினர் ஜெகஜீவன்ராம்.

ஜனதாக் கட்சியின் தேசிய நிர்வாகக்குழு கூட்டம் நேற்று 2வது நாளாக நடந்தது.

சிலர் ஜனசங்கத்திலும் இருக்கிறார்கள். ஆர். எஸ். எஸ். இயக்கத்திலும் இருக்கிறார்கள். இந்த இரட்டை மெம்பர் முறையை ஒழிக்க வேண்டும். ஆர். எஸ். எஸ். இயக்கத் தொடர்பை அடியோடு நீக்க வேண்டும் என்று இதில் பேசிய உறுப்பினர்கள் கூறினார்கள்.

மோகன்தாரியா மூலம் இந்தப் பிரச்சினை கிளப்பப்பட்டது.

ஆர். எஸ். எஸ், தொடர்பை ஜனசங்கத்தினர் உடனடியாகத் துண்டிக்கவேண்டும் இல்லாவிட்டால் இப்பிரச்சினையை எதிர்க்கட்சியினர் தேர்தலுக்குப் பயன்படுத்திக் கொள்வார்கள் என்று மோகன்தாரியா கூறினார்.

### எதிர்ப்பு

மோகன்தாரியாவுடன் அவரது ஊரைச் சேர்ந்த (புனாநகர்) என்.ஜி.கோரே கடுமையாக மோதினார்.

இந்தப் பிரச்சினை அப்படி ஒன்றும் அவசர முக்கியத்துவம் வாய்ந்ததல்ல. தொடர்ந்து பேச்சுவார்த்தை நடத்தி தீர்த்துக்கொள்ளலாம் என்று என். ஜி. கோரே கூறினார்.

ஆர். எஸ். எஸ். பிரச்சினையை கிளப்புகிறவர்களை எல். கே. அத்வானி கடுமையாகச் சாடினார்.

ஆர். எஸ். எஸ். பிரச்சினையை அவ்வப்போது கிளப்பி கட்சித் தலைவர்களே கட்சியைக் கெடுக்கிறார்கள். இந்த சர்ச்சைக்கு ஒரு முற்றுப் புள்ளி வைக்க வேண்டும் என்று கேட்டுக்கொண்டார் அத்வானி.

### நழுவினர்

ஜெகஜீவன்ராம் பேசும்போது "இந்தப் பிரச்சினையை சந்திரசேகரே கவனித்துக் கொள்ளட்டும்" என்றார்.

எப்படிப்பட்ட கருத்து வேற்றுமையிருந்தாலும், அதைச் சரிக்கட்ட சந்திரசேகருக்கு அனுமதி அளிக்க வேண்டும்.

இந்தப் பிரச்சினையில் ஏற்கெனவே ஓரளவு உடன்பாடு ஏற்பட்டிருக்கிறது என்று ஜெகஜீவன்ராம் கூறினார்.

### சந்திரசேகர்

சந்திரசேகர் இறுதியில் பேசுகையில் கூறியதாவது: "இந்து சாம்ராஜ்யம் அமைப்பு என்கிற பேச்சே கிடையாது. எப்படிப்பட்ட இனப்பிரச்சினையையும் ஆதரிக்கமாட்டோம். இந்த நேரத்தில் நமக்குள் ஒற்றுமை தேவை. இன்னும் 4 மாதத்துக்கு ஆர். எஸ். எஸ். விவகாரத்தைக் கிளப்பாமல் சும்மா இருங்கள்".

இவ்வாறு சந்திரசேகர் கூறினார்.

### நாடாளுமன்ற கலைப்பு விஷயத்தில் யாருடைய தலையீடும் இல்லை

# மனச்சாட்சிபடியே நடந்தேன்: சஞ்சீவ ரெட்டி பேச்சு

திருப்பதி, செப். 3-"நாடாளுமன்றத்தைக் கலைத்து விட்டு இடைத் தேர்தலுக்கு உத்தரவிட்டதில் யாருடைய தலையீடும் இல்லை. நான் என் மனச்சாட்சியின்படிதான் நடந்தேன்" என்று ஜனாதிபதி சஞ்சீவரெட்டி கூறினார்.

என்மனச்சாட்சிப்படி நான்மேலும் செயல்பட வெங்கடாசலபதி தான் எனக்கு தைரியம் தந்து ஆசிவழங்க வேண்டும் என்றும் அவர் குறிப்பிட்டார்.

நாடாளுமன்றத்தைக் கலைத்துவிட்டு இடைத் தேர்தலுக்கு ஜனாதிபதி உத்தரவிட்டதை ஜனதா கட்சி கடுமையாக எதிர்க்கிறது.

புது மந்திரிசபை அமைக்க ஜெகஜீவன் ராமை அழைத்திருக்க வேண்டும். அப்படிச் செய்யாததற்காக ஜனாதிபதி மீது மாநிலங்களவையில் கண்டனத்தீர்மானம் கொண்டு வருவோம் என்று அவர்கள் அறிவித்துள்ளனர்.

கடந்த இரண்டு மாத காலத்தில் அடுத்தடுத்து ஏற்பட்ட அரசியல் நெருக்கடிகளைச் சமாளித்ததை யொட்டி, திருப்பதி வெங்கடாசலபதி கோவிலில் நேற்று ஜனாதிபதி சஞ்சீவ ரெட்டி சென்று விசேஷ பிரார்த்தனை நடத்தினார்.

ஆந்திரமுதல்வர் சென்னா ரெட்டி, அமைச்சர்கள் கோவில் அலுவலர்கள், நிர்வாகிகள் ஆகியோர் ஜனாதிபதியை வரவேற்றனர்.

சஞ்சீவரெட்டி 15 நிமிடம் அங்கு தங்கி சாமி கும்பிட்டார்.

வெங்கடாசலபதியின் பட்டு அங்கவஸ்திர ஆடை அவருக்கு பொன்னாடையாகப் போர்த்தப்பட்டது.

### காணிக்கை செலுத்தினர்

கோவிலின் தங்கவாசலில் ஜனாதிபதியை அமரச் செய்து வெங்கடாசலபதியின் பட்டுநூல் பவித்ர மாலையை அணிவித்தனர்.

உண்டியலில் ஜனாதிபதி சஞ்சீவரெட்டி காணிக்கைச் செலுத்தினர். அவருக்கு விசேஷ பிரசாதங்கள் வழங்கப்பட்டன.

பின்னர் வெங்கடேஸ்வரா பல்கலைக்கழக வெள்ளி விழாவை ஜனாதிபதி சஞ்சீவ ரெட்டி துவக்கிவைத்தார்.

சஞ்சீவ ரெட்டி பேசியதாவது:

சமீபத்தில் நான் எடுத்த முடிவு (நாடாளுமன்ற கலைப்பு) என் மனச்சாட்சிப்படி தீர்மானித்தது. இதில் யார் தலையீடும் இல்லை. நான் யாருக்கும் பயப்படவில்லை.

என் மனச்சாட்சிப்படி மேலும் செயலாற்ற வெங்கடாசலபதிதான் எனக்குத் தைரியம்தந்து ஆசிவழங்க வேண்டும்.

### பதவி ஆசை இல்லை

எனக்கு 65வயதாகிறது. எனக்கு பதவி, பணம் மீது ஆசை இல்லை.

எனக்கு சிலை வைக்க வேண்டும என்று என்னிடம் அனுமதி கேட்டனர். உயிருடன் இருப்பவர்களுக்கும் பதவியில் இருப்பவர்களுக்கும் சிலை வைக்கக் கூடாது என்று நான் கூறிவிட்டேன்.

இவ்வாறு ஜனாதிபதி சஞ்சீவ ரெட்டி பேசினார்.

## குழப்பமே உன் பெயர் கருணாநிதியா ?

பிற்படுத்தப்பட்டோர் நலக்குழு 1974-ம் ஆண்டு தன்னுடைய அறிக்கையைக் கொடுத்தது. 9-ஆயிரம் ரூபாய் ஆண்டு வருமானம் நிர்ணயிக்கவேண்டும் என்ற முடிவுக்கு அக்குழுவின் தலைவர் சட்டநாதனிடமே எதிர்ப்பு தெரிவித்தேன் என்று கருணாநிதி பேசியிருக்கிறார்.

பிற்படுத்தப்பட்டோர் நலக்குழு நியமிக்கப்பட்டது 1969-ல். அதுவும் இந்தக்குழு 1971-ம் ஆண்டு தனது அறிக்கையை கொடுத்தது என்று இக்குழுவின் தலைவராக இருந்த சட்டநாதனே தெளிவுறக் கூறி இருக்கிறார்...

கருணாநிதி இந்த விஷயத்தைப் பெரிதுபடுத்தி மக்கள் மத்தியில் "குழப்பத்தை" உண்டு பண்ணி அரசியலை "விளையாட்டாக்கலாம்" என்று செயல்படுகிறார்.

அவரது கட்சியிலேயே இதற்கு ஆதரவு ஏற்படவில்லை என்ற நிலையில் அவருக்கே குழப்பம் ஏற்பட்டு விட்டது போலும்!

அதனால்தான் நீதியை சாடுகிறார். குழு அறிக்கை 1974-ல் வந்தது என்கிறார். சட்டநாதனுடன் பேசினேன் என்கிறார்.

எல்லாவற்றையும் குழப்புகிறார், குழப்பமே உன் பெயர்தான் கருணாநிதியா?

### பேச்சாளர் முகவரி

பழனி மு. தனலட்சுமி
பழனி தொகுதி மகளிர் பிரிவு அமைப்பாளர்,
55, வெங்கடேசன் இல்லம்,
சன்னதித் தெரு.
அடிவாரம், பழனி.

# சுவரண்சிங் காங்கிரஸ் கூட்டு யாருடன்?

### மாநில கமிட்டிகளே முடிவு செய்யும்

புதுடெல்லி, செப். 3- வருகிற நாடாளுமன்றத் தேர்தலில் அந்தந்த மாநிலமட்டத்தில் உள்ள நிலைமைகளுக்கு ஏற்பத்தொகுதி உடன்பாடு காண சுவரண்சிங் காங்கிரஸ் செயற்குழு முடிவு செய்திருக்கிறது.

சுவரண்சிங் காங்கிரசின் செயற்குழுக் கூட்டம் நேற்று (ஞாயிறு) மாலை கூடியது.

இந்தக்கூட்டத்தின் முடிவுக்குப் பின்னர் இக்கட்சியின் தலைவர் சுவரண்சிங் நிருபர்களுக்குபேட்டியளிக்கையில் கூறியதாவது:-

அந்தந்த மாநில அளவில் காங்கிரஸ்கட்சிதொகுதி உடன்பாடு காண அனுமதி அளிக்கப்பட்டிருக்கிறது. இருந்தாலும் இதற்கு மேலிடத்தின் அனுமதியைப் பெற்றாக வேண்டும். இதற்குக் காரணம் தொகுதி உடன்பாடு செய்து கொள்ளும் கட்சிகள்தேசியகொள்கைக்கு உடன்பட்டவையாகஇருத்தல்வேண்டும் என்பதற்காகவே இந்த அனுமதி விஷயம்வற்புறுத்தப்படும்.

காங்கிரஸ் கட்சி சரண்சிங் ஜனதா கட்சியுடன் இணைவதானால் "இந்திய தேசிய காங்கிரஸ்" என்ற தனது பெயரையும், தனித்தன்மையையும் தொடர்ந்து வைத்திருக்க இயலாமல் போகும். அதனால்தான் சரண்சிங் ஜனதாக் கட்சியுடனும், இதர முற்போக்கு சக்திகளுடனும் தேர்தல் கூட்டு மட்டுமே பெற்றிருக்க வேண்டும். இணைப்புக்கு முற்படக் கூடாது என்று செயற்குழு கருத்து தெரிவித்தது.

குறிப்பாக மாநிலங்களின் காங்கிரஸ் கட்சித் தலைவர்கள் சரண்சிங் ஜனதா கட்சியுடன் கூட்டு வைத்துக்கொள்ள விரும்புகிறார்கள்.

இந்தவிதத்தேர்தல்கூட்டு சேருவதற்கு எந்த மாநிலத்தைச் சேர்ந்தவர்களும் எதிர்ப்பு தெரிவிக்கவில்லை"

இவ்வாறு சுவரண்சிங் நிருபர்களிடம் கூறினார்.

## கவிஞர் முத்துலிங்கம் வேண்டுகோள்

அண்ணா தமிழ் இலக்கியக் கழகச் செயலாளராக இருப்பவர் கவிஞர் இ. முத்துராமலிங்கம் ஆவார். ஆனால் நண்பர்கள் கவிஞர் முத்துலிங்கம் என்று என் பெயருக்குத் தவறாக தமிழ் இலக்கியக் கழக நிர்வாகிகள் தேர்வுப் பட்டியலை அனுப்புகிறார்கள்.

அனைத்திந்திய அண்ணா தி.மு.க.வில் பொதுக்குழு உறுப்பினராக இருக்கும் நான் அண்ணா இலக்கியக் கழகத்தில் சாதாரண உறுப்பினர் தானேயன்றிவேறு எந்தப் பொறுப்பிலும் இல்லை. கட்சிப் பணி ஆற்றுவதோடு திரைப்படங்களுக்குப் பாடல்கள் எழுதுவதை எனது தொழிலாகக் கொண்டிருக்கிறேன்.

ஆகவே கழக நண்பர்களும் இலக்கியக் கழக நண்பர்களும் கவிஞர் முத்துலிங்கம் கவிஞர் இ. முத்துராமலிங்கம் ஆகிய பெயர்களுக்குள்ள வேறுபாட்டை உணர்ந்து தொடர்புகொள்ள வேண்டுகிறேன்.

தங்கள் அன்புள்ள
முத்துலிங்கம்

### மறைவு

மாயூரம் வட்டம், வடகரை-அறங்கடி கழகச் செயல்வீரர் எஸ். எம். ஜியாவுதீன் கடந்த 24-ந் தேதி விபத்தொன்றில் மறைவு எய்தினர். இறுதி ஊர்வலத்தில் தஞ்சை மாவட்ட கழக அமைப்பாளர் கோவி. நாராயணசாமி, கோ. பெருமாள், என். விஜயபாலன், தம்பி பால வேலாயுதம் மற்றும் பல கழகத் தோழர்கள் கலந்து கொண்டனர்.

# அண்ணா




# தேர்தல்வன்முறைகளை தடுப்பது எப்படி?

## தலைமை செயலாளர்கள் மாநாட்டில் ஆலோசனை

புதுடெல்லி, செப். 3-நாடாளுமன்றத் தேர்தலை யொட்டி அனைத்து மாநில அரசு தலைமைச் செயலாளர்கள் மாநாடு இந்த மாதம் 15-ந் தேதி டெல்லியில் நடக்கிறது.

துணைப் பிரதமரும், உள்துறை அமைச்சருமான சவான் மாநாட்டைத் தொடக்கி வைக்கிறார்.

இந்தியா முழுவதிலுமிருந்து எல்லா மாநில அரசு தலைமைச் செயலாளர்களும் இந்த ஒரு நாள்மாநாட்டில் பங்கேற்கின்றனர்.

### கார்த்திகேயன்

தமிழக அரசின்சார்பாக தமிழக அரசு தலைமைச் செயலாளர் கார்த்திகேயன் இந்த மாநாட்டில் கலந்து கொள்கிறார்.

வரவிருக்கும் நாடாளுமன்ற இடைத்தேர்தலையொட்டி எல்லா மாநிலங்களிலும் உள்ள சட்டம்-ஒழுங்கு நிலைமை பற்றி இந்த மாநாட்டில் விவாதிக்கப்படும்.

### முடிவு

தேர்தலை ஒரே நாளில் நடத்தி முடிப்பதா? அல்லது இரண்டு நாளில் நடத்துவதா என்று மாநாட்டில் முடிவு செய் செய்யப்படும்,

தேர்தலை இரண்டு நாளில் நடத்துவதைக் காட்டிலும் ஒரே நாளில் நடத்துவதுதான் நல்லது என்று மத்திய அரசுக்கு தேர்தல் கமிஷன் சிபாரிசு செய்துள்ளது.

இதனால் வன்முறைச் சம்பவங்கள் குறையலாம் என்றும் தேர்தல் கமிஷன் கருத்து தெரிவித்துள்ளது. இது பற்றியும் இந்த மாநாட்டில் விவாதிக்கப்படும்.

தேர்தலின்போது வன்முறை சம்பவங்கள் நடக்கலாம் என்று கருதப்படுவதால்குறிப்பிட்ட இடத்திற்கு போதிய போலீஸ் பாதுகாப்பு அளிக்கவேண்டிய தன் அவசியம் பற்றியும், இதில் பரிசீலனை செய்யப்படுகிறது.

ஆர்ப்பாட்டங்கள் ஒவ்வொரு மாநிலத்திலும் எந்தெந்த இடங்களில் நடக்கக்கூடும் என்பது பற்றி அந்தந்த மாநில அரசு தலைமைச் செயலாளர்கள் மாநாட்டில் குறிப்பிட்டுப் பேசுவார்கள்.

அதற்குத் தகுந்தவாறு முன் எச்சரிக்கை நடவடிக்கைகள் மேற்கொள்வது பற்றி மாநாட்டில் யோசனை செய்யப்படும்.

### மத்திய போலீசார்

தேர்தல் அமைதியாகவும், நியாயமாகவும் நடைபெற பாதுகாப்புப் பணிக்கு மத்திய போலீசாரை பயன்படுத்திக் கொள்வது பற்றி மத்திய உள்நாட்டு இலாகா அதிகாரிகள், தேர்தல் அதிகாரிகளுடனும் மாநில அரசுடனும் கலந்து பேசி முடிவு செய்வார்கள்.

### விசேஷ குழு

மத்திய அரசு உள்நாட்டு இலாகாவின் உயர் அதிகாரிகளைக் கொண்ட ஒரு விசேஷக் குழு நியமிக்கப்பட்டுள்ளது. இவர்கள் தேர்தல் பணிகளில் தேர்தல் கமிஷனுடன் ஒத்துழைத்து சட்டம் ஒழுங்கு நிலைமை பற்றி தகவல் கொடுப்பார்கள். இவர்களுடைய யோசனைகளும் மாநாட்டில் விவாதத்திற்கு வைக்கப்படும்

### அனைத்து கட்சிகள் மாநாடு

தலைமைச் செயலாளர்களின் மாநாட்டுக்குமுன்னதாக தலைமைத் தேர்தல் அதிகாரி ஷக்தார் கூட்டும் அனைத்துக் கட்சிகளின் மாநாடு டெல்லியில் வருகிற 12ந்தேதி (புதன் கிழமை)நடக்கஇருக்கிறது.

## கழகத் தோழர் திருமணம்

சென்னை, செப். 3-தேன்பாக்கம் கிராமம் கந்தசாமியின் மகனும் கழகத் தோழருமான கே. கிருஷ்ணனுக்கும் சென்னை சிவலிங்கபுரம் ஜி. நடராஜனின் மகள் மல்லிகாவுக்கும் சென்னை கே. கே. நகர் சிவலிங்கபுரத்தில் பொப்லிராசா சாலையில் உள்ள அந்தோணி நர்சரி பள்ளியில் நேற்று(ஞாயிற்றுக்கிழமை) திருமணம் சிறப்பாக நடந்தது.

குடிசை மாற்று வாரியத்தலைவர் ராமபத்திரன், அப்துல் ரசாக் எம். எல். ஏ., வழக்கறிஞர் ராமகிருஷ்ணபாபு, துரையரசன் சக்தி, ராமநாதன் மற்றும் பல கழக மன்றத் தோழர்கள் திருமணத்திற்கு வந்திருந்தனர்,



# காளிமுத்து சுப்புலட்சுமி பங்கேற்கும் கல்லூரி விழா

சென்னை, செப். 3-சென்னை கிறித்தவக் கல்லூரியின் தமிழ்ப் பேரவை 92-ம் ஆண்டு விழா இம் மாதம்7-ந்தேதி(வெள்ளிக் கிழமை) மாலை 4 மணிக்கு நடக்கிறது.

தாம்பரம் கிறிஸ்துவக் கல்லூரிமுதல்வர் டாக்டர் எம். ஏபல் விழாவுக்கு தலைமை வகிக்கிறார்.

அமைச்சர் சுப்புலட்சுமி ஜெகதீசன் விழாவினைத் தொடங்கி வைக்கிறார். அமைச்சர் காளிமுத்து சிறப்புச் சொற்பொழிவாற்றுவார். சென்னையில் உள்ள இலங்கை துணைத் தூதுவர் கவுதமதசாவும் விழாவில் கலந்துகொண்டு பேசுவார்.

# தொழிற்சங்கப் பிரிவுச்செயலர் வை. பெருமாள் நிகழ்ச்சிகள்

செப். 4-திருச்சி பி. எச். இ. எல். பேச்சுவார்த்தை, 5- சென்னை பால்வள நிறுவனம் பேச்சு வார்த்தை, 6- சென்னை, 7-ஈரோடு-பள்ளிப்பாளையம், 8-9 கோவை, 10- சென்னை.

# வார்னிஷ் விற்பனைக்கு போலீஸ் தடை

சென்னை, செப். 3- விற்பனையாளர்களிடம் உள்ள கச்சா வார்னிஷ் கையிருப்பை விற்க மதுவிலக்கு போலீசார் தடை போட்டிருக்கிறார்கள்.

மயிலாப்பூரில் கள்ளச் சாராயம் குடித்த 3 பேர் மரணம் அடைந்தனர். இதையொட்டி கள்ளச் சாராயம் விற்ற நபர்களிடம் போலீசார் தீவிரமாக விசாரணை செய்து வருகிறார்கள்.

வியாபாரிகளிடம் உள்ள கச்சா வார்னிஷ் கையிருப்புக்களை விற்கக்கூடாது என்று மதுவிலக்கு போலீசார் முடக்கிவைத்துள்ளனர்.

### அருணசலம் ஆறுதல்

மது அருந்தி மயங்கிய நிலையில் கிடந்த 14 பேர் மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டுள்ளனர். அவர்கள் தீவிர கண்காணிப்புப் பிரிவில் வைக்கப்பட்டு சிகிச்சை பெறுகிறார்கள். மக்கள் நல்வாழ்வுத் துறை அமைச்சரின் பேரவைச் செயலர் நாமக்கல் அருணசலம் மருத்துவமனைக்குச்சென்று சிகிச்சை பெறுகிறவர்களைப் பார்த்தார். அவர்களுக்கு அளிக்கப்படும் சிகிச்சை முறைகளைக் கேட்டறிந்தார்.

14 பேர் உடல் நிலையும் தேறி வருகிறது.

# அரசுக்கு கிராம உத்தியோகஸ்தர் சங்கம் நன்றி

சென்னை, செப். 3-தமிழ்நாடு கிராம உத்தியோகஸ்தர்கள் நடவடிக்கைக் குழுவினர் அளித்த கோரிக்கைகளை பரிசீலித்து உத்தரவு வழங்கிய தமிழக அரசுக்கு கிராம உத்தியோகஸ்தர்கள் சங்கம் நன்றி தெரிவித்துள்ளது.

# நாடாளுமன்றத்தைக் கலைக்க பயந்தவர் மொரார்ஜி தேசாய்

## சரண்சிங் குற்றச்சாட்டு

புதுடெல்லி, செப் 3- மக்களைச் சந்திப்பதற்கு ஜனதாக்கட்சி பயந்தது அதனால்தான் நாடாளுமன்றத்தைக் கலைப்பதற்கு மொரார்ஜி தேசாய் பயந்தார் என்று பிரதமர் சரண்சிங் கூறினார்.

மராட்டிய மாநிலத்தைச் சேர்ந்த சரண்சிங் கட்சி ஆதரவாளர்கள் சனிக்கிழமையன்று பிரதமர் சரண்சிங்கை அவரது இல்லத்தில் சந்தித்துப் பேசினார்கள்.

அவர்கள் மத்தியில் சரண்சிங் பேசியதாவது:-

விவசாயிகள்தான் இந்த நாட்டின் முதுகெலும்பு விவசாயிகள் இன்னமும் தங்கள் முழு சக்தியையும் உணரவில்லை. அவர்கள் தங்கள் உரிமைகளுக்காக போராடுவதற்கு ஒன்று சேர வேண்டும்.

ரசாயன உரங்கள் மீதான வரிகள் குறைக்கப்பட்ட போது, பணக்கார விவசாயிகளுக்காக, நகர்ப்புற மக்களின் மீது வரிச்சுமையை ஏற்றுவதாக என் மீது குற்றம் சுமத்தினார்கள்.

இது என்மீது வேண்டும் என்றே சாட்டப்பட்ட குற்றச்சாட்டாகும். ஒரு விவசாயினுடைய மகன் (சரண்சிங்) பிரதமர் ஆவதை விரும்பாதவர்களே இவ்வாறு குறைகூறினார்கள்.

மக்களிடம் எனக்கு முழு நம்பிக்கை இருக்கிறது. இதனால்தான் நாடாளுமன்றத்தைக் கலைப்பதற்கு நான் சிபாரிசு செய்தேன். நாடாளுமன்றத்தை கலைத்ததை ஜனதாக் கட்சி மட்டுமே எதிர்க்கிறது. அதற்குக் காரணம் ஜனதாகட்சிமக்களைசந்திப்பதற்கு பயந்தது. அப்படி பயப்படாமல் இருந்திருந்தால் மொரார்ஜிதேசாய் ராஜினுமா செய்தபோது நாடாளுமன்றத்தை கலைப்பதற்கு அவரே சிபாரிசு செய்திருப்பார்."

இவ்வாறு சரண்சிங் பேசினார்.

ரயிலில் ஓசி பாஸ்

# ராஜ் நாராயண் மறுப்பு

புதுடெல்லி, செப். 3-ரயிலில் செல்ல நான் ஓசிப் பாஸ் கேட்கவில்லை என்று ராஜ் நாராயணன் மறுத்தார். தந்திரியக் கலைஞர் கபூருக்கு கமலபதி திருபாதி ரயில்வே அமைச்சராக இருந்தபோதே இலவச பாஸ் வழங்கப்பட்டது என்றும் அவர் கூறினார்.

# ராணுவ சட்டத்தை மீறியதாக பூட்டோவின் மகள் மீது வழக்கு

இஸ்லாமாபாத், செப். 3-ராணுவ சட்ட விதிகளை மீறியதாக பூட்டோவின் மகள் பெனசிர் மீது பாகிஸ்தான் ராணுவ அரசு வழக்கு தொடர்ந்திருக்கிறது.

பாகிஸ்தான் ராணுவ அரசின் தலைவர் ஜியா இந்த நடவடிக்கையை எடுத்திருக்கிறார்.

தூக்கிலிடப்பட்ட முன்னாள் பாகிஸ்தான் பிரதமர் பூட்டோவின் மகள் பெனசிர், பூட்டோவின் 'மக்கள் கட்சி'யின் முக்கியத் தலைவர்களில் ஒருவராக இருந்து வருகிறார்.

சில தினங்களுக்கு முன்பு பலுசிஸ்தான் மாநிலத்தில் பெனசிர் சுற்றுப்பயணம் செய்தபோது பலஇடங்களில் நடந்த பொதுக் கூட்டங்களில் கலந்து கொண்டு பேசினார்.

அப்போது ராணுவ சட்ட விதிகளை மீறியதாக இவர் மீது குற்றஞ்சாட்டப்பட்டு இருக்கிறது.

இதையொட்டி தனித் தனியாக பெனசிர் மீது மூன்று வழக்குகள் தொடரப்பட்டு இருக்கின்றன.

பாகிஸ்தான் அதிபர் ஜியா உல் ஹக் இந்த நடவடிக்கையை எடுத்திருக்கிறார்.

பாகிஸ்தான் இஸ்லாமிய கொள்கையை எதிர்ப்பவர்கள் நீதித்துறை, அல்லது ராணுவ அதிகாரிகளை விமர்சிப்பவர்கள் தேர்தலில் நிற்க தடை விதிக்கப்படும் என்று சமீபத்தில் பாகிஸ்தான் அதிபர் ஜியா உல் ஹக் தெரிவித்துள்ளார்.

நாகையில் கள்ளச்சாராய விற்பனை:

# தி. மு. க. கவுன்சிலர் வீட்டில் சோதனை

நாகப்பட்டினம், செப். 3-கள்ளச்சாராயம்காய்ச்சி விற்பனைசெய்ததாகநாகை நகரமன்ற முன்னாள் தி. மு. க. கவுன்சிலரும் முன்னாள் நகரச் செயலாளருமான ராமதாஸ் வீட்டில் காவல்துறையினர் சோதனை நடத்தினார்கள்.

ராமதாஸ் வீட்டில் கள்ளச் சாராயம் காய்ச்சி விற்கப்படுவதாக காவல் துறையினருக்கு தகவல் கிடைத்தது.

அதனை ஒட்டி நாகை துணை கண்காணிப்பாளர் தனது கோஷ்டியினருடன் சென்று சோதனையிட்டார்.

சாராயபாட்டில்களையும் ஊறலுக்காக வைத்து இருந்த பொருள்களையும் காவல்துறையினர் கைப்பற்றினார்கள்.

இந்த வழக்கு தொடர்பாக முன்னாள் தி. மு. க. கவுன்சிலரின் தம்பி மோகனதாஸ் (வயது 26) கைது செய்யப்பட்டார்.




தங்கமணி பப்ளிகேஷனுக்காக 275. அவ்வை சண்முகம் சாலை, சென்னை- 600 014 என்ற முகவரியிலிருந்து கே. ரவீந்திரனல் வெளியிடப்படுகிறது. அச்சிடுபவர் பி. தங்கராஜன். 'நவசக்தி' அச்சகம் சென்னை-600 004.
ஆசிரியர்: எம்.ஜி. சக்ரபாணி.